25th March 1958]

**Sri A. V. P. ASAITHAMBI** : புதுக்கோட்டை மாவட்டத்தை தனியாக அமைக்க வேண்டும் என்று சொல்லுகிருர்கள். அதே மாதிரி, ராமனுதபுரம் மாவட்டத்திலுள்ள சில பகுதிகளை புதுக்கோட்டையுடன் சேர்த்து, மிகுதி இருக்கின்ற ராமனுதபுரம் மாவட்டத்தின் பெயரை விருது நகர் மாவட்டம் என்று மாற்றி அமைப்பதற்கு சர்க்கார் முன்வருமா ? ஏனென்ருல் இப்பொழுது ராமனுதபுரம் மாவட்டத்தின் "ஹெட்குவார்ட்டர்ஸ்" மதுரையில் இருக்கிறது.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : இந்தப் பிரச்னை மும்முரமாக எடுத்துக்கொள்ளும் போது இவைகள் எல்லாம் கவனிக்கப்படும்.

**Sri V. ARUNACHALA THEVAR** : புதுக் கோட்டை சமஸ்தானமாக இருந்த காலத்தில், அங்கு கட்டிட வசதிகள் இருந்தன. அதை வைத்துக் கொண்டு அதை ஒரு தனி ஜில்லாவாக பிரிக்கலாம் என்று கனம் முதல் அமைச்சர் அவர்கள் சொல்லி இருக்கிருர்கள். சர்க்கார் கூடிய சீக்கிரம் அதை தனி ஜில்லாவாக பிரிப்பார்களா என்று தெரிய ஆசைப்படுகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : " கூடிய சீக்கிரம் " என்ருல் அரசாங்க " அகராதியில் " வேறு அர்த்தம். (சிரிப்பு)

**Sri M. C. MUTHUKUMARASWAMY** : பிரிக்கப்படும் ஜில்லாக்களில் தஞ்சை ஜில்லாவும் ஒன்று என்று அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். அப்படி தஞ்சை ஜில்லா பிரிக்கப்படும்போது காரைக்கால் பிரதேசத்தையும் சேர்ப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU** : ஜில்லாக்கள் பிரிக்கப்படும் போது இவைகள் எல்லாம் கவனிக்கப்படும். இரண்டு மூன்று ஜில்லாக்களிலிருந்து சில பகுதிகள் எடுக்கப்படவேண்டியிருக்கும். சில பகுதிகள் சேர்க்கப்பட வேண்டியிருக்கும். இப்பொழுது இதைப் பற்றி ஒன்றும் சொல்வதற்கு இல்லை.

**Sri A. GOVINDASAMY** : " கூடிய சீக்கிரம் " என்ற வார்த்தைக்கு அரசாங்க " டிக்ஷ்னரியில் " வேறு அர்த்தம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள். அது எவ்வளவு காலம் என்பதை விளக்கிச் சொல்வார்களா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU** : சாதாரணமான காலத்தை விட கொஞ்சம் அதிகப்படியான காலம் என்று அர்த்தம். (சிரிப்பு)

**Sri P. G. MANICKAM** : கோயம்புத்தூரில் இருக்கும் பல இலாகாக்கள் இப்பொழுது இரண்டாகப் பிரிக்கப்பட்டு, தலைமை ஸ்தாபனங்களும் வெவ்வேறு இடங்களுக்கு மாற்றப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. ஆகையால் அங்கு இருக்கும் ஜில்லா கலெக்டர்களுக்கு ஸ்பெஷல் அதிகாரிகள் நியமிக்கப் பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**Mr. SPEAKER** : இது கோயம்புத்தூர் ஜில்லாவைப்பற்றிய கேள்வி. இந்த கேள்வியை இப்பொழுது அனுமதிக்க முடியாது.

*Basic Education.*

* 402 *Q.*—Sri T. S. RAMASWAMY PILLAI and Sri A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the progress of the Basic System of education; and

(*b*) the facilities provided for the students, who have completed their Post-Basic education, for their further Collegiate studies?

[25th March 1958

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) Six copies of the Booklet showing the progress of Basic Education for 1956–57 are kept in the Legislature Secretariat Library for reference;

(*b*) The matter will be taken up with the Universities as soon as the syllabus for the course is finalised.

Sri K. VINAYAKAM : Is the Hon. Minister aware of the fact that the very teachers who are appointed to propagate the system of basic education are doing anti-basic education propaganda, thus undermining the very laudable object with which it has been launched in our State?

Mr. SPEAKER : How does that question arise from the main question. Further there is an insinuation in the question.

**Sri A. VEDARATHNAM** : "போஸ்ட் பேஸிக்" கல்வியை படித்த மாணவர்களுக்கு மேல்படிப்பு படிப்பதற்கு இங்கே ரூரல் காலேஜ், ரூரல் யூனிவர்சிடி அமைப்பதற்கு ஏற்பாடுகள் உண்டா ? அப்படியானால் எங்கே, எப்பொழுது என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இப்பொழுது சர்க்காருக்கு அந்தவிதமான திட்டம் ஒன்றும் இல்லை. ஆனால் இரண்டு ரூரல் இன்ஸ்டிடியூட்கள்—ஒன்று காந்திகிராமத்திலும், மற்றொன்று பெரியநாயக்கன் பாளையத்திலும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இங்கு "போஸ்ட் பேஸிக்" பயிற்சி பெற்றவர்களுக்கு முக்கிய இடம் கொடுக்கப்படும்.

**Sri A. GOVINDASAMY** : ஏற்கெனவே உத்தியோகத்தில் இருப்பவர்களுக்கு, தள்ளாத வயதில் "போஸ்ட் பேசிக்" பயிற்சி பெறுவதில் பல சங்கடங்கள் இருக்கின்றன. இதை அராசங்கம் கவனிக்குமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இப்பொழுது இந்தக் கேள்வி எழவில்லை.

**Sri K. B. S. MANI** : "போஸ்ட் பேஸிக்" பயிற்சி பெறும் மாணவர்களுக்கு, குறிப்பாக விவசாயத்தில் மட்டும் பயிற்சி அளிக்கப்படுவதாகத் தெரிகிறது. இவர்களுக்கு மற்ற தொழில் துறைகளிலும் பயிற்சி அளிப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : "பேஸிக்" கல்வி என்பதே தொழில் மூலமாக கற்க வேண்டும் என்ற அடிப்படையைக் கொண்டது. என்ன தொழில் இருக்க வேண்டும் என்பது பற்றி, ஒவ்வொரு பள்ளிக் கூடத்திலும் இருக்கக்கூடிய வசதிகளைப் பொறுத்து முடிவு செய்திருக்கிறார்கள். மற்ற தொழில்கள் மூலம் கல்வி சொல்லிக் கொடுப்பதற்கு வசதி இருக்கக்கூடிய இடங்களில் அவைகளை ஆரம்பிப்பதற்கு தடை ஒன்றும் கிடையாது.

**Sri A. VEDARATHNAM** : "போஸ்ட் பேஸிக்" பயிற்சி பெற்றவர்கள் தொழில் கல்லூரிகளில் அனுமதிக்கப்படுகிறார்களா ? அப்படியானால் எந்த எந்த கல்லூரிகளில் இடம் பெறுகிறார்கள். அவர்கள் சீனியர் பேஸிக் டிரெயினிங் ஸ்கூலில் அனுமதிக்கப்படுகிறார்களா? அப்படியில்லாவிட்டால், அவர்களை அனுமதிக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இந்தப் பள்ளிக்கூடங்களில் பாஸ் செய்த உடனேயே தொழில் கல்லூரிகளிலே எடுத்துக் கொள்ள முடியாது. அதற்கு மேல் இரண்டு வருஷம் படிக்க வேண்டும். ஒரு வருஷம் "பிரி யூனிவர்சிடி" படிப்பும், ஒரு வருஷம் "பிரி பொரபஷனல்" படிப்பும் படிக்க வேண்டும். அதற்குப்பிற்பாடுதான் தொழில் கல்லூரிகளில் இடம் பெற முடியும். இவர்கள் நேரிடையாக தொழில் கல்லூரிகளில் இடம் பெறும் பிரச்னை எழவில்லை.

25th March 1958]

சீனியர் பேஸிக் பள்ளிகளில் இடம் பெறுவார்களா என்பது பற்றி இப்பொழுது போஸ்ட் பேஸிக் பள்ளிகளில் எந்த அளவுக்கு படிப்பின் தரம் இருக்கிறது என்பதை நிர்ணயிக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு அவர் களும் தங்களுடைய அறிக்கையை சமர்ப்பித்து இருக்கிறார்கள். அதை பரிசீலனை செய்த பிறகு அந்த படிப்பின் தரம் எஸ்.எஸ்.எல்.ஸி. படிப் பின் தரத்திற்கு உயர்ந்து இருக்குமானால் சீனியர் பேஸிக் பள்ளிகளில் எடுத்துக் கொள்வதற்கு ஆட்சேபனை கிடையாது.

SRI M. P. PERIASAMI : ஓர் ஆசிரியர் பள்ளிகளுக்காக மோக னூரில் 200 பேர்களுக்கு பயிற்சி கொடுக்கப்படுகிறது. ஆனால் அது போஸ்ட் பேஸிக் டிரெயினிங் அல்ல. அந்த இடத்தில் பயிற்சி கொடுக்கும் ஆசிரியர் களுக்கும் "போஸ்ட் பேஸிக்" டிரெயினிங் கொடுப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லா டிரெயினிங் ஸ்கூல் களையும் "பேஸிக் டிரெயினிங்" ஸ்கூல்களாக மாற்ற வேண்டும் என்பது தான் சர்க்காரின் திட்டம். ஒவ்வொரு வருஷமும் 15 அல்லது 16 ஸ்கூல்களை மாற்றிக்கொண்டு வருகின்றோம். இன்னும் சில வருஷங்களில் எல்லா பயிற்சி நிலையங்களும் பேஸிக் பயிற்சி நிலையங்களாக மாறிவிடும்.

SRI T. S. RAMASWAMY PILLAI : "போஸ்ட் பேஸிக்" டிரெயினிங் முடித்தவர்களுக்கு, "பிரி யூனிவர்சிடி கோர்ஸ்"ல் அனுமதிக்கப்படுகிறார் களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்னும் இல்லை.

*Stamp vendors.*

* 403 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether there is any rule preventing the appointment of village headmen as stamp vendors; and

(*b*) if so, whether any exemption from this rule is proposed to be granted to them?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*State Taxes.*

* 404 Q.—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Finance be pleased to state the rate of State taxes *per capita* in the State?

THE HON. SRI C. SUBRAMANIAM :

| | Budget Estimate. 1957–58. RS. | Revised Estimate. 1957–58. RS. |
|---|---|---|
| Incidence of principal heads of revenue *per capita* per annum is .. .. .. .. | 12·6 | 13·7 |
| If the share of Central taxes and revenue from Forests is excluded, the incidence *per capita* .. .. .. .. .. .. | 9·9 | 10·4 |

SRI S. LAZAR : How does it compare with the other States?

THE HON. SRI C. SUBRAMANIAM : I hope to give some information about it during the course of the Budget debate.